உ

குமரன்றுணை.

# வண்ணவிருத்தப் பதிகம்,

# பன்னிரு சீர்க்கழிநெடில் விருத்தப்பதிகம்,

# பஞ்சரத்நம்.

IMS0320-2

இவை

திருச்செங்கோடு முத்தமிழ்வித்வான்

ம-ா-ா-ஸ்ரீ,

சே. கு. விசாகப்பெருமாள் முதலியாரவர்களால்

இயற்றப்பெற்று.

சேற்றூர்ச் சமஸ்தான வித்துவான்

மு. ரா. அருணாசலக் கவிராயரால்,

பரிசோதிக்கப்பெற்று.



சென்னை:

அல்பினியன் அச்சியந்திர சாலையிற்,

பதிப்பிக்கப்பெற்றன.

1902

உ

முருகன்றுணை.

கருமலை ஆண்டவர்

# துதிமஞ்சரி.

—:o:—

முதலாவது

## வண்ணவிருத்தப் பதிகம்.

—:o:—

### காப்பு.

நேரிசை வெண்பா.

சீரார் கருமலைவாழ் செம்மலெனுங் கந்தர்மிசைப்
பாரார்வண் ணப்பதிகம் பாடவே—கூராக்
கடக்குஞ் சரனே ரிருத்துமவர் காணுங்
கடக்குஞ் சரனோநற் காப்பு.

### நூல்.

பூவளர் செந்திரு மார்பி லியங்கிடு
புனித முறுந்தகை யிறைமாலின்
மாவள ருஞ்செழு நீப மணிந்தநன்
வளமை மிகுந்திடு மருகாபைங்
காவள ரஞ்சுக மோடு பிகந்திகழ்
கருமலை சுந்தர மதுசேர
வாவலொ டங்கொளிர் வேலவ னின்பத
வருள்பெற வந்தன னெழில்ராஜன். (க)

சேயடை வெம்பசி தானதறிந்தனே
செழுமூலே தந்திட லுணராய்கொன்
மாயனு வந்திடு மாமரு கன்றின
மனதிடை வஞ்சக மதுமேடன்
ஞாயம தென்றுரை யேயினி தந்திட
னயமென நெஞ்சினி னினேயேலொண்
ணேய மலிந்தருள் ராஜய னிங்கித
நெறியுள னங்கரு மலேயோனே. (௨)

கீரர்சொ லுந்தமிழ் மாலேபு கழ்ந்தும
கிழுமரு டந்திட விலேயோநல்
லாரம ணிந்துனே ராஜய னின்றிவ
ணணுகிவ ணங்கின னினியாளும்
பாரம துன்றன தேயல திங்கெவர்
பரிவொடு வந்துமு னருள்வார்கள்
வாரணி கொங்கைகள் சேர்குற வங்கனே
மருவுர ணங்கரு மலேயோனே. (௩)

மேலவர் கொண்டிடு மீறிய வெஞ்சினம்
விரைவி லொழிந்திடு மெனநூலி
லேலமொ ழிந்திடு பாவுரை யுங்கொளி
னிசைகுவ தன்றென மிதமீறுஞ்
சாலமு ளங்கொடு நீமிகு வஞ்சனே
சரியுறல் வெம்பழி யதுவாகும்
பாலனெ னும்பொறை ராஜயன் வந்தனே
பரிவுசெ யங்கரு மலேயோனே. (௪)

வானமர் மஞ்சது தானது கண்டிடின்
மகிழ்வுட னஞ்சிறை விரிவோடு
தானன தந்தன வானந டம்பெறு
தகைகொள்சி கண்டியின் முதுகேறி
தீனரை யென்றும்வி டாதுபு ரந்திடு
செழுமையு றுங்கொடை மிகுராஜன்
மேனனி தண்க்ருபை யாவதொ ழுங்கெழில்
விளைவுறு மங்கரு மலையோனே. (ரு)

ஆதர வென்றுனை யேநினை யென்றனை
யலமரல் கொண்டிடு செயலார
நீதரி லென்றும்வி டாதுனை வன்பழி
நிசமிது வென்றுள மெணுவாய்வல்
காதக வஞ்சகர் தாமிகு கம்பலை
கருமலை தங்குகு ழககூடி
னீதம தொன்றுநல் ராஜ னெடுந்துயர்
நிதமும டைந்திட னெறியாமோ. (சு)

நாரணி யொன்றுசெ யாறுரு வங்குக
நவிலரு மிஞ்சிய வழகாநன்
னீரணி செஞ்சடை யானனி கொஞ்சிடு
நிருமல வொண்கதிர் வடிவேல
காரது வந்தடை சோலைநெ ருங்கிய
கருமலை யின்றர வளர்வாச
சாரம றிந்துரை ராஜய னுன்க்ருபை
தனையெதிர் கொண்டன னதுதாராய். (எ)

நேசமி குந்தெழி லார்கள பம்பிதிர்
　　நிரைதரு குங்கும மொடுவேரி
வீசவி ளங்குப டாமு யர்ந்திடு
　　மிருகம தஞ்செழு பனிநீர்நல்
வாசமு திர்ந்திடு பாளித மிஞ்சிய
　　மணமிக லங்க்ருத முருகாபொய்
யாசறு மிங்கித ராஜய னுன்சர
　　ணருளுக வங்கரு மலையோனே. (அ)

பாகன செஞ்சொலை யோதிடு குஞ்சரி
　　பரிவொ டணைந்திடு மெழின்மார்ப
யோகமு றுந்தவர் தாமடை யும்பத
　　யுளகமு றுஞ்சய பிரபாவ
மாகன மிஞ்சிய ராஜய னுன்சரண்
　　மலரையு வந்தன னதனாலே
நீகழி கொண்டிடு கோபம றந்தரு
　　ணிறைவுசெ யங்கரு மலையோனே. (கூ)

வாழிய நின்க்ருபை வாழிய கந்தர
　　மலிகவ ளங்கொளுன் மயிலோடு
வாழிய மின்பயில் வேலது குஞ்சரி
　　மகிழ்குற மங்கையொ டுயர்கோழி
வாழிய செந்திரு வாழிய பைந்தமிழ்
　　வளருக வொண்புக ழெழில்ராஜன்
வாழிய தன்கிளை வாழிய மைந்தர்கள்
　　வளமிகு தண்கரு மலையோனே. (கo)

முற்றிற்று.

உ

முருகன்றுணை.

இரண்டாவது

# பன்னிரு சீர்க்கழிநெடில் விருத்தப் பதிகம்.

—:0:—

## காப்பு.

நேரிசை வெண்பா.

காரார் கருமலைவாழ் கர்த்தனெனுங் கந்தன்மேற்
சீரார் பதிகமது செப்பவே—நேராங்
திருவா ரணத்தான் றிகழ்மருகன் முத்தி
தருவா ரணத்தான் சரண்.

## நூல்.

பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

நீரார் வேணிச் சங்கரனு
　　நிமலன் றன்பாற் சுரரேகி
நின்று வணங்கிச் சூரன்று
　　னெடுநாட் செய்த கொடுமைசொலச்
சீரார் பஞ்ச முகத்தோடு
　　திகழு மதோமு கமுந்தந்து
செழுவ தனங்க ளாறாகித்
　　திருநுத லதனில் விளங்கியமா
வோரா றுவிழி யுந்திறக்க
　　வோங்கிய வொப்பில் லாப்புலிங்க
மூயர்சர வணமார் பொய்கையினி
　　லுய்ப்பப் பொன்னுரு வாருகி

யேரார் சரவண பவனெனவே
    யிலகச் சத்தி யெடுத்தணைக்க
வெழிலார் கந்த னெனப்பேர்கொண்
    டிசைசிறை கருமலை வாழ்பவனே. (க)

ஆரு தாரப் பொருணீயே
    யவிர்குண பரிபூ ரணனீயே
யாறுரு வோருரு வாய்நின்ற
    வமலவ சிகர மணிநீயே
மாருத் துயரி லழுந்தியதே
    வர்க்கன் றபய மளித்தயிலான்
மாமர மாக வளர்ந்ததனி
    மகிமைமி குஞ்சூ ரனைவீட்டிப்
பேரு மயிலை வாகனமாப்
    பிடியர் சேவல் கேதனமாப்
பெட்பொ டமைத்திடு பரனீயே
    பிரணவ மூவா முதனீயே
தேரு வடியேற் கெந்நாளுந்
    திடமன மிலகிட முன்னணுகிச்
சீர்பெறு வரமருள் பவனீயே
    திருமலி கருமலை வாழ்பவனே. (உ)

மலரோ னைச்சிறை யிட்டாய்நீ
    மாதவ மூற்றிடு நாரதர்செய்
மகத்தில் வந்த மேடமதை
    வாகன மாக்கிக் கொண்டாய்நீ
யலரா மிதழிச் சடையானுக்
    கன்று பிரணவ முரைத்தாய்நீ

யருமறை முடிவா கியசைவத்
தமர்ந்த தூயகொ ழுந்தேநீ
யிலகிய தெய்வப் பிடியதனை
யேற்ற மணமது பெற்றாய்நீ
யெயின ரிளங்கொடி யாம்வள்ளி
யேந்திழை தனையு மணந்தாய்நீ
பலர்மிகு புகழ்சொ லுமிருமூன்று
படைவீட் டினையே யுற்றாய்நீ
பணிந்த நாயேற் கருள்வரமே
படிமதி கருமலை வாழ்பவனே. (கூ)

மாத ரளகம் புயலெனவும்
வரிவிழி மாவடு தானெனவும்
வாயி னூறலை யமுதெனவும்
வயங்கு மூரலை முத்தெனவுந்
தீதறு முகமுழு மதியெனவுந்
திகழ்முலை செவ்விள நீரெனவுஞ்
சீர்பெற் றிடுமிடை மின்னெனவுஞ்
செழித்த வல்குல் சுனையெனவு
மோத லதுவே யெழில்வேத
வுயர்பா ராயண மெனவெண்ணி
யுனதோர் பதமலர் தனைநினையா
துழன்ற நாயே னினியேனும்
பேத மறநின் றன்னடியார்
பெருங்கு ழாங்கண் டடிபேணிப்
பேறு பெறவருள் சிகிகிள்ளை
யிகமலி கருமலை வாழ்பவனே. (௰)

சந்தம விந்தவ ருங்கலையே
தரணித னிற்பெரி தாகவெணிச்
சரிவர வாராய்ந் திடுவல்லோர்
தகைபெற் றிடாநற் கொடைதருவோர்
சொந்தம தென்றவர் பாலணுகித்
துணைசெய வகையில் லாமன்மிடி
தொட்டுவ ருந்திடு செயல்கண்டு
துகளறு செல்வ மிகக்கொண்டோர்
தந்தயை மேலா மென்றவரைச்
சார்ந்திடி லோவவர் முழுமூடர்
தயாள குணமில் லாலோப
சண்டா ளரெனும் பட்டமுளா
ரிந்த விதமாக் கற்றவர்தா
மிடுக்க ணெய்திட நீபுரித
லிழிவன் றோவடி யார்க்கருள்வா
யிதுதகி கருமலை வாழ்பவனே. (ரு)

ஆதா ரமுனை யன்றியெனை
யாளத் தக்கவர் யார்வேறே
யதனையு ணர்ந்துங் கபடமதை
யடைகுத னெறியோ மேன்மேலே
யேதா கிலுநான் பிழையதுதா
னியலச் செய்தது முண்டோசொல்
லிழிவிது மேன்மையி தென்றுணரா
வெளியே னொருகாற் செய்திடினும்
மாதா தந்தையர் தங்குழவி
வகைதெரி யாம லியற்றியதோர்

## பன்னிருசீர்க்கழிநெடில் விருத்தப் பதிகம். கக

வழுவைக் காணி னுடன்சரியாம்
வழியைக் காட்டுதல் போலாள்வாய்
வாதா மோநீ பாருகனே
மவுன மொழிப்பாய் துணைநீயே
மயின்மீ தேறியி வண்வந்து
வரமருள் கருமலை வாழ்பவனே. (சு)

கற்பக நேர்ந்தோ ரோர்குறைவுங்
காண்கில ரென்பது நிசமன்றோ
கருதித் தொழுதே னுன்பதமிக்
காலத் தெளியேன் வறுமையினா
லற்பரு மதியா விதமாகி
யலைந்து திரிவ துனக்கழகோ
வதனா லென்ன பயன்கண்டா
யழுத குழந்தை தனக்குத்தாய்
பற்பல நயமொழி பேசிமுலைப்
பாலூட் டுவது முணர்ந்திலையோ
பணிந்து நின்புகழ் பன்னாளும்
பாடியு மென்முறை யீராறு
பொற்பவிர் செவிகளி லேறாத
புதுமையை யென்னென் றேசொலுவேன்
புனிதா வினிதா னனிதாளீர்
புயலுறு கருமலை வாழ்பவனே. (எ)

எத்தனை யெத்தனை விதமாக
வேத்தியு முன்மன மிரங்கவிலை
யேதென வுரைப்பே னொருக்காலு
மிசைக்க வொண்ணு மிடியதனைப்

பத்தர்க ளடைவது தெறியாமோ
பாரிற் பழியுனை நேருமலாற்
பயனே தாகிலு முண்டுகொலோ
பலதுய ரடியே னுற்றிடநீ
சித்தம கிழ்ந்திடல் விளையாட்டோ
தெரியச் சொலுவா யிப்போது
செல்வ மிகக்கொண் டோரென்னைச்
செருக்கி னாலே யிகழ்ந்தனர்காண்
வைத்த சினமதை யிக்கணநேர்
மாற்றிச் செல்வந் தந்திடுவாய்
மலைமகள் மகனே குகனேநீர்
வளமலி கருமலை வாழ்பவனே. (அ)

சூரரா தியர்தா னவராலே
சொல்ல வொணாத துன்புறவே
துணைசெய மனதி லிரக்கமொடு
சூரனை யொளிரயி லால்வீட்டி
யரசிந் திரனுக் குதவினையே
யப்படி யிப்பொழு துளமகிழ்வோ
டநுதின முந்தவ ருதுன்ற
னடியம் போருக மதையுன்னி
மரகத மயில்வா கனமுருகா
வள்ளிம ணாளா வரிமருகா
மறைமுதல் வாசர வணபவனே
வருவாய் வரமது தருவாயென்
றிரவும் பகலுந் தொழுதேனே
யென்பகை வரைவென் றிடஅரிதோ

விக்கண மடியேன் முன்னணுகி
        யினிதருள் கருமலை வாழ்பவனே. (கூ)

(கடைமடக்கு)

சீரார் திறமெய்க் கேசரியே
        திகழுந் தன்மெய்க் கேசரியே
செழிக்கு மாட்சி வாகனமாத்
        தேடிடு மாட்சி வாகனமா
நேரா ருமையவ ளின்கொழுந
        னிறைசே ருலகம தின்கொழுந
னிதியென மிக்கவி ளங்குமர
        னிணைசுத ஞன விளங்குமர
காரா ராக வரிமருகா
        கதிர்பின் ஞக வரிமருகா
காட்சியன் மகள்குஞ் சரிமணமே
        கண்டவ ஞகுஞ் சரிமணமே
யோரா யுறுகஞ் சமுகத்தா
        யியல்சுரர் பெருகஞ் சமுகத்தா
யெளியேன் கருமலை வாழ்பவனே
        தினியருள் கருமலை வாழ்பவனே. (கo)

(வாழி)

திருவொடு கலைமகண் மறைவாழி
        தேவரு மாதவ ரும்வாழி
திகழ்கட லொடுபுவி முகில்வாழி
        செந்தமிழ் நாலெட் டறம்வாழி
மருவள ரிதழிக் கண்ணியனும்
        வளமலி துளசித் தாரானும்

வச்சிர பாணியு மிரவியுமா
மதியமும் விண்மீன் களும்வாழி
பெருமைமி குந்திடு மயில்வாழி
பீடுயர் மயில்குக் குடம்வாழி
பெருகிய வழகார் குறமகளும்
பிறங்கு குஞ்சரி யும்வாழி
தருமகு ணம்பெறு ராஜயனோர்
தருசுத ரொடுகலை நிதிமிகவே
தங்கத் தரணியி னிதம்வாழி
தகைநிறை கருமலை வாழ்பவனே. (கக)

முற்றிற்று.



நேரிசை வெண்பா.

செண்பகமா தேவி திகழவளர் சங்கரனே
நண்பகலா துன்ற னளினபதம்—பண்பகமாக்
கொண்டுதுதி ராஜயவேள் கொண்ட துயரொழித்துப்
பண்டுபோ னல்லருட்கண் பார்.

கட்டளைக் கலித்துறை.

பல்லான்ற கேள்வியர் வாழ்த்துங் கருமலைப் பாவகிக்கு
நல்லா தரங்கொளுந் தாயென யாவரு நன்குதொழ
வில்லா தவனென மாவொளி தந்து விளங்கெழில்சேர்
செல்லாண்டி யம்மையே ராஜய னுக்கருள் செய்குவையே.

முற்றிற்று.



உ

முருகன்றுணை.

மூன்றவது.

கருமலைக் குமரேசர்பேரிற்,

# பஞ்சரத்நம்.

—:o:—

ஆசிரிய விருத்தம்.

திருவளரு மார்பன்மத களிறுமடு நடுவிலொரு
செழுமுதலை பற்றவெருவித்
திகழாதி மூலமென வுடன்வந்து காத்தவன்
றினமகிழு மருகனென்று
மருமலியு முயர்தா ரகப்ரம்ம வுருவென்று
மாசற்ற மெய்யடியர்தம்
வல்வினைகள் யாவையும் பரிதிமுன் பனியென்ன
மறையச்செய் முதல்வனென்றுங்
கருவமிகு சூர்தடிந் தமரர்துயர் மாற்றுநற்
கருணைவா ரிதியென்றுநேர்
காசினியி லுள்ளவர்கள் யாவரு மிறைஞ்சியே
கைகூப்பி வாழ்த்துமுருகா
கருதியொரு பொழுதுமற வாதுநின் புகழ்சொலிக்
கழலினைத் தரிசித்துமா
கதியினைப் பெறநாடு மடியனுக் கருளீக
கருமலைக் குமரேசனே. (க)

வரும்பாத கப்பிறவி யுததிதனை நீந்தவுன்
மாவருட் டோணியுதவி
மாருத சாயுஜ்ய வாழ்வுதரு நின்வனச
மலரடியை வாழ்த்தாமலே
யரும்பாத வக்கொங்கை மடவார் மயற்கடலி
லாழ்ந்துதே டியபொருளினை
யாற்றிற் கரைத்தபுளி யெனவிரைத் தெந்நாளு
மழியா வறத்தைச்செய
விரும்பாத புல்லரொடு சேர்ந்துபற் புதமாகு
மெய்யினைச் சதமென்றெணி
வீண்பொழுது போக்காது கருணைசெயி னடியர்குழு
மேவியுன் றன்புகழ்சொலல்
கரும்பாத வன்றனொளி யெனுமுனது சாரசக்
கழல்பணிதல் காட்சியென்பேன்
கதியினைப் பெறநாடு மடியனுக் கருளீக
கருமலைக் குமரேசனே. (௨)

ஞானமிசை யுனையலா லொருகதியு மிலையென்ன
நாடினது நீயறிகுவாய்
ஞானவமு தூட்டியிந் நாயினைப் பலகாலு
நல்வழியில் வைத்தவிழிவோ
சீலமுள நக்கீரர் முதலாய வாயிரவர்
செப்புமுறை கேட்டிரங்கித்
திருவுள மகிழ்ந்தருள வில்லையோ வடியனேன்
செய்துதிக் குந்துணைசெய்வா
யாலமுண் டவனுகு முந்தைக்கு முபதேச
மன்றுரைத் திடுவல்லவ

னுதலா லாறுருவு மோருருவ தாம்ப்ரம்ம
மையனே நீயேயெனக்
காலமெல் லாமனதி லுன்னினேன் மேலான
கழலிணைத் தொழுதுநல்ல
கதியினைப் பெறநாடு மடியனுக் கருளீக
கருமலைக் குமரேசனே. (க)

பண்ணைபொழில் மலர்வாவி பலசூழு மோராறு
படைவீடு கொண்டவனுநீ
படைதேவ னைச்சிறையி லிட்டவனு நீதகுவர்
படையைத் தொலைத்தவனுநீ
விண்ணையிரு நிலமாதி யாவும் படைத்தபின்
மேலா யளித்தழிக்கு
மெய்யான தெய்வநீ யருவுநீ யுருவுநீ
விடையேறு மீசனுக்குந்
தண்ணைறு மாலையணி மலைமடந் தைக்குமுயர்
தநயனீ சுகவாரிநீ
சச்சிதா னந்தஸ்வ ரூபநீ யெண்ணரிய
தாரகப் ரம்மமுதனீ
கண்ணையிமை காப்பதென வெந்நாளு மன்புடன்
காத்தலுன் கடனுதலாற்
கதியினைப் பெறநாடு மடியனுக் கருளீக
கருமலைக் குமரேசனே. (உ)

உன்னிரு பதத்தின்முன் பலகவி யியற்றியே
யோதிப் புகழ்ந்திறைஞ்ச
வுன்னிய பலன்களெல் லாமொழுங் காகவே
யுதவினை யதற்கிணங்க

வென்னிரு தயங்களிப் பெய்தியது சந்ததமு
மிருவிதி விருத்தியாகி
யியலறஞ் செய்துநன் னெறியதனி லொழுகிடவு:
மெப்போது மெங்நோயுமே
மன்னிடா வகையுறவு முனதுமெய்ப் பத்தனு
மாவிரா ஜப்பெயரினுல்
வளரீகை யாளனுக் கருளவிது சமயமே
மாகடப் பந்தாரனே
கன்னியொரு பாகர்தங் தநயனே வேலனே
கருணைப்ர வாகமுகிலே
கதியினைப் பெறநாடு மடியனுக் கருளீக
கருமலைக் குமரேசனே. (ரு)

முற்றிற்று.

ஆகச்செய்யுள். ௩௦.

